# பகவத் பாதை



## Bagavath Path

இது ஒரு பகவத் மிஷன் வெளியீடு

பாதை - 1 | 2012 / ஆகஸ்ட் | மலர் - 11

தனிச்சுற்றுக்கு மட்டும்


Sri Bagavath

அகத்தில் சும்மா இருப்பது என்பது நமது முயற்சியால் வருவதன்று, அகத்தை சீரமைக்க எதுவும் செய்ய முடியாது என்று கண்டுபிடிப்பதன் விளைவே ஆகும்.

– ஸ்ரீ பகவத்



## செயலும் அனுபவமும்

- ஸ்ரீ பகவத்

ஒரு புற்று நோயாளி மருத்துவரிடம் சிகிச்சை பெறுகிறார். மருத்துவர் எல்லாவிதமான மருத்துவத்தின் மூலமாகவும் முயற்சி செய்து பார்க்கிறார். நோய் கட்டுப்படவில்லை. இன்னும் பத்து நாட்களுக்குள் நோயாளி இறந்துவிடுவார் என்பது அவருக்குத் தெரிந்துவிடுகிறது. நோயாளியை மரணத்திற்குத் தயார்படுத்த நினைக்கிறார். நோயாளியிடம் அதனைத் தெரிவித்து, மரணத்தை அமைதியுடன் எதிர்கொள்ளும்படி கூறுகிறார்.

நோயாளியும், நடந்ததைப் புரிந்து கொள்கிறார். இனி வேறு வழி இல்லை. நோயாளி அமைதியடைந்து விடுகிறார். மரணத்தை அமைதியுடன் எதிர்கொள்ளத் தயாராகிவிடுகிறார்.

இரண்டு தினங்களுக்குப்பிறகு அதே மருத்துவர் நோயாளியிடம் வருகிறார். புதிய தகவல் ஒன்றைக் கூறுகிறார்.

"இப்போது புதிதாக ஒரு மருந்து வந்துள்ளது. உங்களைப் போன்ற நிலையிலுள்ள பலரை அந்த மருந்து குணப்படுத்தியுள்ளது. நாளையிலிருந்து அந்த மருந்தை உங்களுக்கும் கொடுக்கப்போகிறோம்".

- இப்படி மருத்துவர் கூறுகிறார்.

இப்போது நோயாளிக்குப் பதட்டம் ஏற்பட்டுவிட்டது.

மரணம்தான் நிச்சயம் என்ற நிலையில் அவருடைய மனம் அமைதியில் இருந்தது. மரணத்திலிருந்து விடுபட சாத்தியம் உள்ளது என்று தெரிந்ததும், அவர் மனம் பதட்டமடைய ஆரம்பித்துவிட்டது. மரணத்தைக் கண்டு பயப்பட்டாலும், மரணத்தைக் கண்டு பதட்டமடைந்தாலும் அதில் ஒரு நியாயம் இருக்கிறது.

ஆனால், மரணம் நமக்கு மன அமைதியைக் கொடுக்கிறது. மரணத்திலிருந்து தப்பிவிடுவது மனப்பதட்டத்தைக் கொடுக்கிறது என்றால் அது நியாயமாகப்படவில்லை.

ஆனால் இது நடந்த நிகழ்ச்சி. அதனால் அதனை ‘அப்படி இருக்க முடியாது’ என்று நாம் மறுத்துவிடமுடியாது.

அதில் சதாம்ஹுசேன், மரணதண்டனையை மன அமைதியுடன் ஏற்றுக்கொண்டதாகவும், தூக்குக் கயிற்றைத் தனது கழுத்துக்கு வசதியாகச் சரி செய்து கொடுத்ததாகவும் பத்திரிகையில் செய்தி வந்திருந்தது.

மரணத்திலிருந்து தப்பிக்க வழியே இல்லை என்ற நிலையில், அவர் மனப்பதட்டம் இல்லாமல், மரணத்தை அமைதியுடன் ஏற்றுக்கொண்டார்.

ஜெயிலிலிருந்தோ, மரணத்திலிருந்தோ தப்பிக்கும் வாய்ப்பு ஏதாவது இருக்கும் பட்சத்தில்,

அவர் மனப்பதட்டம் இல்லாமல் மரணத்தை எதிர்கொள்வாரா?

இங்கு என்ன நடக்கின்றது?

எதனால் பதட்டம்? எதனால் அமைதி?

மரணம் தான் முடிவு; அதில் எந்த மாற்றமும் இல்லையென்ற நிலையில்,

நாம் முயற்சிப்பதற்கோ, போராடுவதற்கோ எதுவும் இல்லை என்ற நிலையில்,

நம் மனம் அமைதியடைந்து விடுகின்றது. நாம் மனப்போராட்டத்துடன் இருக்கிறோமென்றால், நாம் நமது செயலை முடிவுக்குக் கொண்டு வரவில்லை என்று தான் பொருள்.

நமது வாழ்க்கையில் நாம் எத்தனையோ பிரச்சினைகளைச் சந்திக்கின்றோம்; எத்தனையோ கஷ்டங்களைச் சந்திக்கின்றோம்.

நம்முடைய பிரச்சினைகள் நமக்குக் கஷ்டத்தைக் கொடுக்கிறது, துயரத்தைக் கொடுக்கிறது என்றால்,

நாம் நம்முடைய பிரச்சினைகளை முடிவுக்குக் கொண்டுவரவில்லை என்றுதான் பொருள்.

பிரச்சினைகளை முடிவுக்குக் கொண்டுவருவது என்றால் என்ன?

பிரச்சினைகளை வெற்றிகரமாக எதிர்கொண்டு தீர்வு காணலாம்;

அல்லது நம்மால் முடிந்தவரையிலும் போராடி, தோல்வியையும் தழுவலாம்.

மொத்தத்தில்,

நமது முயற்சிகளும், போராட்டமும் முடிந்துவிடவேண்டும்.

மரணம்தான் முடிவு; அதை எதிர்கொள்வதைத் தவிர வேறு வழியே இல்லை என்ற நிலையில் மனம் அமைதி அடைகின்றது.

நமக்கு ஏற்படும் எல்லாப் பிரச்சினைகளையும், இப்படி, எடுத்தேன் கவிழ்த்தேன் என்று முடித்துவிட முடியாது.

சில பிரச்சினைகள் - இல்லை பல பிரச்சினைகள், தொடர்கதையாகத்தான் இருக்கும். ஆரம்பம், முடிவில்லாமல் இழுத்துக்கொண்டே தான் இருக்கும்.

இந்நிலையில் பிரச்சினைகளை எதிர்கொள்வது எவ்வாறு?

பிரச்சினை, பிரச்சினை என்று கூறுகிறோம்.

பிரச்சினை என்றால் என்ன?

ஒருவர் நம்மை அவமானப்படுத்தித் திட்டிவிடுகிறார். நாம் மனவேதனை அடைகிறோம்.

நம்மைத் திட்டியவர் மனந்திருந்தி நம்மிடம் மன்னிப்புக் கோருகிறார். நமது மனவேதனை மறைந்துவிடுகிறது.

நமது பொருள் களவுபோய் விடுகிறது. நாம் மனவேதனை அடைகிறோம். களவு போன பொருள் திரும்பக் கிடைத்துவிடுகிறது. நமது மனவேதனை மறைந்துவிடுகிறது.

இதுதான் பிரச்சினை; இதுதான் பிரச்சினையின் தீர்வு.

நாம் பார்த்த அதே உதாரணத்தை இன்னுமொரு வகையாகப் பார்ப்போம்.

ஒருவர் நம்மைத் திட்டிவிடுகிறார். ஆனால் மனவேதனை அடையவில்லை. அவர் திட்டியது, நமக்கு வேதனையைக் கொடுக்கவில்லை.

இதேபோல்,

நமது பொருள் களவு போய்விடுகிறது. ஆனால் நாம் அதனால் மனவருத்தமடையவில்லை.

இப்போது, நமது பிரச்சினை என்ன தன்மையில் இருக்கும்?

நாம் விரும்பாத செயல் ஏற்படும்போது, நமது மனம் பாதிக்கப்பட்டால் மட்டுமே,

அது நமக்கு ஒரு பிரச்சினை

மனதைப் பாதிக்காத பிரச்சினைகள் அனைத்தும், பிரச்சினைகளே அல்ல. மனப்பாதிப்பை ஏற்படுத்தினால் மட்டுமே அது பிரச்சினை.

நாம் முதன்முதலாக ஓர் உதாரணத்தை ஒரு சம்பவத்தைப் பார்த்தோம். புற்றுநோயாளி மரணத்தை மனப்பூர்வமாக ஏற்றுக்கொண்டார். இதனால் அவருடைய மனம் அமைதி பெற்றுவிட்டது.

மனம் என்பது அக அனுபவம், புற நிகழ்வை அவர் மனப்பூர்வமாக ஏற்றுக் கொண்டுவிட்டார். செய்யவேண்டியதையெல்லாம் செய்து முடித்துவிட்டு,

இனி செய்வதற்கு எதுவும் இல்லை என்ற நிலையில், புறநிகழ்வை முழுமையாக ஏற்றுக் கொண்டுவிட்டார்.

இனி,

புற நிகழ்வைப் பொறுத்த அளவில் அவருக்கு எந்த முயற்சியும் கிடையாது.

அவரைப் பொறுத்தவரை புறநிகழ்வு ஒரு முடிவுக்கு வந்துவிட்டது. புறநிகழ்வு முடிவுக்கு வந்து விட்டதால்,

அகத்தில் அனுபவங்கள் ஓய்ந்து அமைதியும் ஏற்பட்டுவிட்டது.

நம்முடைய பிரச்சினைகள் அனைத்திற்கும் இப்படி இரண்டு பகுதிகள் உள்ளன.

புறத்தைப் பொறுத்த அளவில் செயல் நிகழ்வுகளாகவும், அகத்தைப் பொறுத்த அளவில் அனுபவ உணர்வின் வெளிப்பாடாகவும் அமைந்துள்ளன.

புறநிகழ்வை முடிவுக்குக் கொண்டு வருவதன் மூலம் அக உணர்வும் முடிவுக்கு வந்துவிடுகின்றது.

புறநிகழ்வுகளை முடிவுக்குக் கொண்டு வருவதற்காகத்தான், 'மாயை' தத்துவம் பெரிதும் பேசப்படுகிறது.

"அனைத்தும் மாயை; நடப்பதெல்லாம் ஒரு நாடகம்; உண்மையில் எந்த நிகழ்வும் நடக்கவில்லை; அனைத்து நிகழ்வுகளும் இறைவனின் திருவிளையாடல்; நாம் யாவரும் நடிகர்கள்தாம்; எந்தச் செயலும் முக்கியத்துவம் உடைய செயல் அன்று"

- இப்படி நமது புறச் செயல்களை முடிவு கட்டி முடித்துக்கொள்வதற்காக,

பலவிதமான தத்துவக் கருத்துக்கள் பேசப்படுகின்றன.

நமது பிரச்சினைகளின் ஒரு முனை,

வெளிப்புற நிகழ்வு.

நமது பிரச்சினைகளின் அடுத்த முனை,

நமது மனதினுள் ஏற்படும் மன அனுபவங்கள்.

புறநிகழ்வுகளை முடிவுக்குக் கொண்டுவந்து முடித்துக்கொள்வதைப் போல்,

மன அனுபவங்களையும் முடிவுக்குக் கொண்டுவந்து,

முடித்துக்கொள்ள முடியுமா?

முடித்துக்கொள்வது என்பது என்ன?

நோயாளி, தனது நோயைக் குணப்படுத்தி, புற நிகழ்வை முடித்துக் கொள்ளவில்லை.

அங்கு நாம் செய்வதற்கு எதுவும் இல்லை என்ற நிலையில் ஒரு முடிவுக்கு வந்துவிடுகிறார்.

இப்படி,

நமது மன அனுபவங்களையும் முடித்துக் கொள்ள முடியுமா?

நமது மன அனுபவங்களைப் பற்றி நமக்குத் தெரியும்.

மகிழ்ச்சி ஏற்படுகிறது; துக்கம் ஏற்படுகிறது; பயம் ஏற்படுகிறது; கோபம் ஏற்படுகிறது.

- இப்படி எத்தனையோ விதமான மன அனுபவங்கள் ஏற்படுகின்றன.

இந்த அனுபவங்களை நாமாக ஏற்படுத்தினோமா, அல்லது அவையாக வந்தனவா?

அனைத்து அனுபவங்களும் தாமாக வந்தவையே.

நமக்கு ஏற்படும் மன அனுபவங்களுக்கு நமது சூழ்நிலை காரணமாக அமையலாம்; நமது மன இயல்பு காரணமாக அமையலாம்.

ஆனால் எந்த உணர்வுகளையும் நாமாக உருவாக்கமுடியாது.

நாமாக முயன்று வருத்தமடைய முடியாது. நாமாக முயன்று பயமடைய முடியாது. நாமாக முயன்று மகிழ்ச்சியடைய முடியாது.

நாமாக முயன்று புறச்செயல்களில் ஈடுபடலாம். ஆனால் நாமாக முயன்று நமது மனோ அனுபவங்களை ஏற்படுத்த முடியாது.

நம்முடைய மன அனுபவங்கள் நமது கட்டுப்பாட்டில் இல்லை.

நாமாக முயன்று நமக்குப் பிடித்த மன அனுபவங்களைக் கொண்டு வரவும் முடியாது; நாமாக முயன்று நமக்குப் பிடிக்காத அனுபவங்களை அப்புறப்படுத்தவும் முடியாது.

ஆனால் அவற்றை நாம் நமது கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவர விரும்புகின்றோம்.

நடைமுறைப்படுத்த முடியாததை,

நடைமுறைப்படுத்த விரும்புகின்றோம்.

உண்மையில்,

நமது அனுபவங்கள் நமக்குக் கட்டுப்பட்டவை அல்ல. இதுதான் யதார்த்தம்; இதுதான் நடைமுறை உண்மை.

நமது மன அனுபவங்கள் நமக்குக் கட்டுப்பட்டவை அல்ல என்ற நடைமுறை உண்மையைப் புரிந்து கொள்வதுதான்,

நமது மன அனுபவங்களுக்கு முடிவுகட்டுவது.

மன அனுபவங்களுக்கு முடிவு கட்டுவது என்பது,

அவற்றைக் கட்டுப்படுத்தி,

முடிவுக்கு வருவதன்று,

அது சம்பந்தமாக நாம் செய்வதற்கு எதுவும் இல்லை என்பதைப்புரிந்து கொள்வது தான்,

மன அனுபவங்களுக்கு முடிவு காண்பதாகும்.

நமது பிரச்சினைகளின் ஒரு முனையில் நிகழ்வுகள் இருக்கின்றன; மறுமுனையில் மன அனுபவங்கள் இருக்கின்றன.

இவற்றுள் எந்த முனையில் தீர்வு கண்டாலும் பிரச்சினைகள் தீர்வடைந்துவிடுகின்றன.

நிகழ்வுகளைப் பொறுத்த அளவில் நிகழ்வுகளைப் புறக்கணித்து, நிகழ்வு என்னும் முனைக்கு முடிவு கட்டுவது என்பது செயல்களிலிருந்து தப்பி ஓடுவதே.

செயல்களைப் புறக்கணிப்பதனால், நாம் நமது பிரச்சினைகளிலிருந்து விடுபடலாம். ஆனால் நமது வாழ்வும், நமது சமுதாயமும் இதனால் வளமற்றுப் போய்விடும்.

செயல்களைப் புறக்கணித்து, செயல்களுக்கு முடிவு கட்டுவதென்பது அறிவுடைமை ஆகாது.

அதே சமயம்,

அக அனுபவங்களைப் புறக்கணிப்பது என்பது,

நாம் செய்ய வேண்டிய கடமை;

இது தான் இயற்கையின் நியதி.

இதுதான் அறிவுடைமை.

அனுபவங்களோடு போராடுவது என்பது இயற்கையை மீறிச் செயல்படுவதாகும்.

நமது மன அனுபவங்கள் இனிமையாக இருக்கும்போது அவற்றை நாம் விரும்புகின்றோம். அவை துன்பமாக இருக்கும் போது அவற்றை நாம் வெறுக்கின்றோம்.

இப்படி விரும்புவதும் வெறுப்பதும் நம்மையறியாமல் நிகழ்வதில் தவறில்லை.

ஆனால் அதனை அறிவுப் பூர்வமாக நாமாக Conscious ஆக முயன்று செய்வதற்கு,

நமக்கு எந்த உரிமையும் கடமையும் கிடையாது.

துன்பமான அனுபவம் நம்மைவிட்டுப் போய்விடவேண்டும் என்ற நிலையில் நாம் நமது 'அனுபவம்' என்னும் பகுதிக்கு முக்கியத்துவம் கொடுத்துவிடுகிறோம்.

நமக்கு ஏற்படும் அனுபவங்கள் யாவும் புறச்செயல்களைச் செய்வதற்காக ஒரு தூண்டுகோலாகவே ஏற்படுகின்றன.

நமது தொழிலில் நமக்கு ஒரு பிரச்சினை ஏற்படுகிறது. அப்போது நமது மனதும் பாதிப்படைகிறது. அப்படி பாதிப்படையும் போதுதான்,

அது அந்தப் பிரச்சினையைத் தீர்வு செய்வதற்கான தூண்டுதலாக அமைகிறது.

நமக்கு மனப்பாதிப்பே ஏற்படாத பட்சத்தில்,

நாம் நமது பிரச்சினைக்குக் கூட தீர்வுகாணாமல் அலட்சியப்படுத்திவிடுவோம்.

நமக்கு ஏற்படும் மன உணர்வுகளை நாம் நமது செயல்களுக்குப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

மற்றபடி நாம் நமது மன உணர்வுகளைச் சீரமைக்க வேண்டிய கடமை எதுவும் நமக்குக் கிடையாது.

நமது மன உணர்வுகளின் ஆயுள் அரைவினாடிதான் என்பதை நாம் ஏற்கனவே பலமுறை பார்த்துவிட்டோம்.

நமது மன உணர்வுகள் யாவும் தாமாக ஏற்பட்டு, தாமாகவே மறைந்துவிடுகின்றன.

அவற்றைச் சீரமைக்க வேண்டிய கடமை எதுவும் நமக்குக் கிடையாது.

அது சம்பந்தமாக நாம் செய்வதற்கு எதுவும் இல்லை என்ற முடிவுக்கு வந்து, நமது மன அனுபவங்களை முடித்துக் கொள்வது மட்டுமே நமது வேலை; நமது கடமை. ★

# ஞானியுடன் அந்த நொடி

ஜுன் மாதம் ஹீலர் பாஸ்கரின் நிகழ்ச்சியில் கலந்து கொள்வதற்காக பகவத் ஐயா அவர்கள் திருச்சிக்கு வந்து இருந்தார். அது ஒரு இனிமையான காலைவேளை. போட்டோகிராபர் சுதாகர் சற்று பரபரப்புடன் காணப்பட்டார். என்னவென்று கேட்ட பொழுது “ஐயாவை போட்டோ எடுக்க இதுவே சரியான நேரம். அவரை எப்படியாவது சிரிக்க வைக்கவேண்டும், அது உங்கள் பொறுப்பு; மற்றதை நான் பார்த்துக் கொள்கிறேன்” என்றார். ஐயா திருச்சிக்கு வரும் பொழுதெல்லாம் சுதாகர் அவர்கள் தன் பணியை விட்டுவிட்டு கேமராவும் கையுமாக வந்துவிடுவார்.



அந்த நேரத்தில் பகவத் ஐயாவின் துணைவியாரும் மற்றும் இரண்டு பெண்மணிகளும் "நாங்கள் Shopping போய்விட்டு வருகிறோம்" என்று கூறிச் சென்றனர். பகவத் ஐயா போட்டோவிற்காகத் தயாராக உட்கார்ந்து இருந்தார். போட்டோகிராபர் சுதாகரும் ரெடி. அப்பொழுது எங்கள் நண்பர் ஒருவர் "ஐயா! மூன்று ஆண்கள் சேர்ந்தால் ஞானத்தைப் பற்றி பேசுகிறோம்", அதுவே "மூன்று பெண்கள் சேர்ந்தால் Shopping கிளம்பி விடுகிறார்களே" என்று சொல்ல, உடனே ஐயா அவர்கள் “அப்பொழுது தானே நாம் 'LIBERATE' (விடுதலை) ஆகமுடியும்” என்று கூற அனைவரும் சிரித்துவிட்டோம். ஐயாவும் சிரித்து விட்டார்கள். போட்டோகிராபர் சுதாகரும் க்ளிக் செய்தார். இதோ இதுதான் அந்த அற்புதமான படம்.

தன்னை உணர்ந்த ஞானி எங்களுடன் இயல்பாக இருந்த அந்த நிமிடங்கள் வாழ்வில் மறக்கமுடியாத தருணங்கள் ஆகும்.

இனி நான் OSHA வின் LIVING TAO என்ற புத்தகத்தில் படித்த விசயத்தை உங்களுடன் பகிர்ந்து கொள்கிறேன். ஒரு சீடர் ஓஷோவிடம் "அன்பிற்கினிய ஓஷோ அவர்களே காலம்காலமா ஒரு சீடர் தன்னுடைய குருவிடம் மிகவும் மரியாதையாகவும், ஒழுக்கமாகவும் நடந்துகொள்ள வேண்டும் என்று கூறப்பட்டு வருகிறது. ஆனால் உங்கள் முன் நான் விளையாட்டாகவும், ஜோக் அடித்துக்கொண்டும், வேண்டாத கேள்விகளைக் கேட்டுக் கொண்டும் இருக்கிறேனே. இது என்னுடைய மரியாதையின்மையையும், விசுவாசமின்மையையும், நம்பிக்கையின்மையையும் காட்டுகிறதா? என்றார்.

அதற்கு ஓஷோ அவர்கள் ‘இது கேள்வியைப் பொறுத்தது அல்ல, கேள்வி கேட்பவரைப் பொறுத்து. கேள்வி முக்கியமல்ல. நீங்கள் ஒரு குருவிடம் ஆழ்ந்த மரியாதையில் இருக்கும்போது விளையாட்டாக, கிண்டலாக, மனதில்பட்ட கேள்விகளைக் கேட்கலாம். இந்த உன்னத நிலையில் உங்களிடமிருந்து வெளிவரும் வார்த்தைகளும், கேள்விகளும் தவறாகவே இருக்காது. ஒரு குருவின் மேல் ஆழ்ந்த நம்பிக்கை இருக்கும் பொழுது வெளிவரும் வார்த்தைகளும் புனிதமாகவே இருக்கும்.

எனவே நீங்கள் ஒரு மாஸ்டரிடம் விளையாட்டாக இருக்கலாம், எந்த கேள்வியைக் வேண்டுமானாலும் கேட்கலாம். அது உங்கள் இதயத்தின் ஆழத்திலிருந்து வரும் பட்சத்தில்.

நன்றி. LIVING TAO

V.J. சரண்குமார்
திருச்சி. செல் : 98940-12639

# பாதையில் மலர்ந்த மலர்கள்

## குருவே துணை

இறையருளால் பிப்ரவரி 2012-ல் பகவத்பாதை எனக்குக் கிடைக்கப்பெற்றது. இரயில் பயணத்தின் போது படித்து முடித்தேன். (கடந்த சில மாதங்களாக என் மனதில் மிகுந்த எழுச்சி ஏற்பட்டது. போராட்டம் மூண்டது. தவம் செய்கின்றோம்! அகத்தூய்மை செய்கின்றோம், பின் ஏன் இத்தனை எண்ணங்கள், முடியவில்லை. ஓய்ந்து போனேன். மனதை வெல்ல உபாயம் தெரியாமல் மனம் துவண்டு போனது) ஆனால் எனக்கு கிடைத்த முதல் பகவத் பாதை படித்ததும் என் தேடல்கள் எல்லாம் நின்றுபோனது. (இறைநிலை அனுபவத்துக்காக மனம் நிறைவில்லாமல் இருந்தது. ஏற்கனவே பெற்ற அனுபவம் ஏன் நிலைத்து நிற்கவில்லை (அ) நம்மோடு நிலைபெற்ற அனுபவத்தை அனுபவிக்கும் முறை தெரியவில்லையா? இப்படிப் பல கேள்விகள்) மனம் போராட்டமும் ஓய்ந்தது. சற்று ஆழமாகச் சிந்திக்க வைத்த வரிகள் "இறைநிலை அனுபவத்தை வேண்டுவது என்பது இறைநிலையை, மறுப்பதே....., புறகணிப்பதே ஆகும். இறைநிலை என்ற பெயரில் ஏதோ ஓர் அனுபவத்தையே தேடிக்கொண்டிருக்கிறோம். அப்படித் தேடிக்கொண்டிருக்கும் நாம் யார்?"

நான் மௌனத்திலிருந்த போது பெற்ற ஞானம், வாழ்வில் நன்கு பயன்பட்டுக்கொண்டிருக்கிறது. விடுதலை ஏற்பட்டது! ஆனால் அதுதான் விடுதலை என்று தெரியாமல் விடுதலையை (முக்தியை) தேடினேன். இயல்பாய் கிடைத்த அமைதியின்பால் விருப்பம்கொண்டு அந்த நிலையை தக்க வைத்துக்கொள்ள முயற்சித்துள்ளேன். அதுதான் விடுதலைக்கு தடை என்பதை ஞானவிடுதலை புத்தகத்தைப் படித்து புரிந்து கொண்டேன். அந்த வரிகள் இதோ

"உணர்மனதே தனக்குத்தான் முரண்பட்டுக்கொள்கிறது
அது தன்னை சீரமைத்துக்கொள்ளப் போராடுகிறது".

16-5-2012-ல் காலை 10-15 மணிக்கு ஐயாவை சென்னையில் அவரது இல்லத்தில் சந்தித்தேன். பல கேள்விகளுக்கு விளக்கம் பெற்றேன். எல்லாவித ஐயங்களுக்கும் இயற்கையின் தன்மையோடு இயல்பாக எளிமையாக விளக்கம்பெற பெற என்னுள்ளே ஏற்பட்ட ஞானத்தையும் விடுதலையும் கவனித்துக்கொண்டே உரையாடினேன். இத்தகைய எளிமையான விடுதலையை பெற எனக்கு 10 ஆண்டுகள் ஆயிற்று! ஆயினும் ஸ்ரீ பகவத் ஐயா 40 ஆண்டுகள் போராடிப் பெற்றுள்ளார். தான்பட்ட துன்பத்தை (அ) போராட்டத்தை ஆன்மீகத் தேடல் உள்ளவர்கள் அனுபவிக்கக் கூடாது என்ற உயர் நோக்கத்தோடு எளிமையாக மிக எளிமையாக விடுதலை பெற வழிவகுத்துக் கொடுத்துள்ளார் ? பகவத் ஐயா அவர்கள்.

அருள்தந்தை வேதாத்திரி மகரிஷியின்
"மனதை அடக்க நினைத்தால் அலையும்"
மனதை அறிய நினைத்தால் அடங்கும்" என்ற வைரவரிகளின் ஆழம் மிக தெளிவாக புரிய ஆரம்பித்தது. அறிவின் தன்மையும் தெரிய ஆரம்பித்தது.

உணர்மனதையும் அடிமனதையும் புரிந்துகொண்டு, "நான் புரிந்து கொண்டு விட்டேன்" என அந்த புரிதலை உறுதிப்படுத்திக்கொண்ட "இந்நன்னாளை ஸ்ரீ பகவத் ஐயாவிற்கும் அருள்தந்தை அவர்களுக்கும் சமர்பிக்கின்றேன்.

நன்றி! வாழ்க வையகம்! வாழ்க வளமுடன்!!

அருள்நிதி J. ரவிசந்தர்
விழுப்புரம். செல் : 94437-29525

## ஐயாவுடைய நிகழ்ச்சி

| நாள் | நிகழ்ச்சி நடைபெறும் இடம் | பொருள் | நிகழ்ச்சி ஒருங்கிணைப்பாளர் |
|---|---|---|---|
| 17-08-2012 வெள்ளி | கோவில்பட்டி | **ஆன்ம ஞானம் மிகவும் எளிது** மாலை 6-00 to 8-30 மணிவரை | திரு. சரவணன் - 9443980088 |
| 18-08-2012 சனி | பிரம்ம ஞான சபை, மேலப்பெருமாள் மேஸ்திரி வீதி, மதுரை | **எல்லாக்கவலைகளுக்கும் ஞானமே தீர்வு** மாலை 5-30 to 8-00 மணிவரை | திரு. R. கிருஷ்ணமூர்த்தி - 9244218137<br>திரு. S. வெங்கடராஜ் - 9894766997<br>திரு. C. தங்கமணி - 9865327950<br>திரு. A. பாலகிருஷ்ணன் - 9443497857 |
| 19-08-2012 ஞாயிறு | V. G. S. மீட்டிங் ஹால், பஸ் நிலையம் தண்ணீர் தொட்டி அருகில், திண்டுக்கல். | **இரகசிய ஆன்ம ஞானம்** மாலை 5-30 to 8-00 மணிவரை | வாழ்க வளமுடன். ஜெயகோபால் - 9150302904<br>திரு. செந்தில் - 9894965623<br>திரு. அசோக் - 9942825255 |
| 20-08-2012 திங்கள் | கரூர் | **தன்னை அறியும் ஞானம்** (Self Realisation) மாலை 6-00 to 8-30 மணிவரை | திரு. மோகன் - 9360110755<br>திரு. ராஜகோபால் - 9360579181 |

**சென்னையில் ஐயாவைச் சந்திக்கும் முகவரி :**

**ஸ்ரீ பகவத்,** கதவு எண். பழைய எண். 107, (புதிய எண் : 77) நித்தியானந்தம் தெரு, வாசுதேவன் நகர், (காசி தியேட்டர் அருகில்), ஜாபர்கான்பேட்டை, (அசோக் நகர்), சென்னை-600083. செல் : 99442-15677

# ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் இந்தச் சக பயணியின் வணக்கம்.

பகவத் ஐயா அவர்கள் தனது மலேசியா பயணத்தை இனிதே முடித்துவிட்டு 26-7-2012 அன்று மாலை திரும்பியுள்ளார்கள்.

மேலும் 29-7-2012 அன்று மாலை மைலாப்பூர் ஃபைன் ஆர்ட்ஸ் கிளப்பில் "ஞானத்தின் இரகசியம்" என்ற தலைப்பில் சிறப்புரை ஆற்றினார்கள். இதில் பலரும் கலந்து பயனடைந்தனர்.

சென்ற மாத இதழின் ஆசிரியர் பகுதியில் ஐயாவின் எளிமையான ஞானத்தெளிவை இச்சமுதாயத்திற்குக் கொண்டு சேர்க்கும் பணியில் ஆர்வமுள்ளவர்கள், தங்கள் பெயர், ஊர், தொடர்பு எண் ஆகியவற்றைப் பதிவு செய்யுமாறு கேட்டுக்கொண்டதற்கிணங்க, வெவ்வேறு ஊர்களைச் சார்ந்த பலரும் தங்கள் விபரத்தை SMS மூலமும், தொலைபேசியில் தொடர்பு கொண்டும் பதிவு செய்திருக்கிறார்கள். அவர்களுக்குப் பகவத்மிஷன் சார்பில், நன்றியையும், பாராட்டுகளையும் தெரிவித்துக்கொள்கிறோம். இதுவரை பதிவுசெய்யாத ஆர்வலர்கள் இருப்பின் அவர்களும் Cell : 97891-65555 (or) 99942-05880 என்ற எண்ணில் எப்பொழுது வேண்டுமானலும் பதிவு செய்யலாம் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

ஆர்வலர்கள், ஆன்மீக தேடுதல் கொண்ட அன்பர்களுக்கு நமது 'பகவத்பாதை' மாத இதழைப் பற்றியும், ஐயாவின் புத்தகங்களைப் பற்றியும் தெரிவிக்குமாறு கேட்டுக்கொள்கிறோம். மேலும் ஐயாவின் சிறப்புரை நிகழ்ச்சியைத் தங்களது ஊரில் ஏற்பாடு செய்ய விரும்புபவர்கள், எங்களைத் தொடர்புகொள்ள வேண்டுகிறோம்.

நமது 'பகவத்பாதை' மாத இதழை நிறைய அன்பர்கள் 'முதல்மாத பிரதியிலிருந்து இதுவரை வந்த பிரதிவரை அனைத்தும் கிடைக்குமா?' எனக் கேட்டுவருகிறார்கள். அதற்கிணங்க ஒரு வருட மாத இதழ்களையும் அன்பர்களின் அனுபவக் கட்டுரைகளையும் இணைத்து ஆண்டுமலராக வெளியிட யோசித்துள்ளோம். இதுபற்றி வாசகர்களும் ஆர்வலர்களும் தங்களது ஆலோசனைகளை வழங்குமாறு கேட்டுக்கொள்கிறோம். நன்றி.

அன்புடன், **K.S. ஜீவமணி,** ஆசிரியர்,

செல் : 97891-65555

# ஜென் கதை

## ஞானி என்ன சொன்னார்?

முன்கதை சுருக்கம் ....

அரசன் ஒருவன் அவனது நாட்டில் சிறந்த முறையில் செங்கோலாட்சி நடத்தி வந்தான். அவனது ஆட்சியில் மக்கள் மகிழ்ச்சியுடன் வாழ்ந்து வந்தார்கள். அவன் தன் மனைவியின் மீது அளவுகடந்த அன்பு வைத்திருந்தான். திடீரென ஒருநாள் எதிர்பாராத விதமாக அவன் மனைவி நோய்வாய்ப்பட்டு இறந்துவிட்டாள். அவளுடைய இழப்பை அரசனால் தாங்கமுடியவில்லை, மிகுந்த மன வேதனை அடைந்தான். அவனது கவனம் ஆட்சியிலிருந்து சிதறியது. இதனால் ஆட்சியில் குழப்பமும் சிக்கலும் ஏற்பட்டு மக்கள் அவதிக்கு உள்ளானார்கள். இதைக் கேள்விப்பட்ட அரசன், தன் மனைவியை இழந்த கவலையையும் போக்க முடியவில்லை, சரியான ஆட்சியையும் நடத்த முடியவில்லையே என்று தன் மீதே வெறுப்படைந்தான். தன் மனப் பிரச்சினையில் இருந்து விடுபட எல்லா வகையான முயற்சியையும் மேற்கொண்டான், முடியவில்லை.மருத்துவர்கள் பலரையும் அணுகித் தீர்வு கேட்டான். ஆனால் எதுவும் பயன்தரவில்லை, நாளுக்கு நாள் கவலையும் பிரச்சினையும் அதிகரித்ததே தவிர குறைந்தபாடில்லை.

இவ்விசயத்தைக் கேள்விப்பட்ட ஓர் ஞானி தன்னை ஒரு மருத்துவர் எனக் கூறிக்கொண்டு அரசனைச் சந்திக்க வந்தார். அரசன் தன் பிரச்சினை அனைத்தையும் கூறி தன் கவலை தீர வழிகேட்டார்.

ஞானியும் "தங்கள் கவலையைத் தீர்க்க வல்ல சிறந்த மருந்து தன்னிடம் உள்ளது" எனக்கூறி மேலும் "இதைத் தாங்கள் மூன்று நாட்களுக்குக் காலை உணவுக்கு முன் சாப்பிட வேண்டும், ஆனால் ஒரு நிபந்தனை. இம்மருந்தை அருந்தும்போது நீங்கள் குரங்கைப் பற்றி நினைக்கக்கூடாது. அப்போதுதான் இம்மருந்து வேலை செய்யும்" என்ற நிபந்தனையையும் கூறினார்.

அரசனும் "குரங்கைப் பற்றி நினைக்கும் பழக்கம் எனக்கு எதுவும் இல்லை. எனவே இது ஒரு பிரச்சினையே அல்ல" என மருந்தை வாங்கிக்கொண்டு "மனவேதனை சரியாகும் வரை தாங்கள் இங்கேயே தங்கி ஓய்வு எடுத்துக்கொள்ளுங்கள்" என ஞானியைக் கேட்டுக்கொண்டான்.

அடுத்த நாள் காலை அரசர் உணவுக்கு முன் மருந்தை அருந்துவதற்காக வாய் அருகே கொண்டு சென்றார். உடனே ஞானி சொல்லிய நிபந்தனை ஞாபகத்திற்கு வந்தது. குரங்கை நினைக்கக்கூடாது என்பது ஞாபகத்திற்கு வந்தது. "ஐய்யய்யோ குரங்கை நினைக்கக்கூடாது என்று குரங்கை நினைத்துவிட்டேனே, மருந்து அருந்த முடியாதே" என்ற வருத்தத்துடன் "சரி நாளை வெகு கவனமாகக் குரங்கை நினைக்காமல் மருந்து சாப்பிடலாம்" என்ற எண்ணத்துடன் உணவை மட்டும் சாப்பிட்டான்.

ஆனால் அடுத்தநாள் மருந்தை கையில் எடுக்கும் முன்னரே குரங்கின் நினைவு வந்தது. இது மனவேதனையை விடப் பெரும் பிரச்சினையாக இருந்தது. இப்படியே மருந்து அருந்தாமலே மூன்று நாட்களும் கழிந்தன.

நான்காம் நாள் ஞானியைச் சந்தித்த அரசன் "குரங்கை நினைக்காமல் மருந்து சாப்பிட முடியவில்லை, இது மனக்கவலையை விடப் பெரும் பிரச்சினையாக உள்ளது. என்ன செய்வது!" என பரிதாபமாகக் கேட்டான். ஞானி "இது மிகவும் எளிதாயிற்றே, என்னிடம் கேட்டிருந்தால் நானே சொல்லியிருப்பேனே" எனக் கூறினார். அரசன் ஆச்சரியத்துடன் "என்ன எளிதான விஷயமா? ஐயா முதலில் அதைச் சொல்லுங்கள் மூன்று நாட்களாக பட்ட பாடு எனக்குத்தான் தெரியும்" என ஞானியின் காலில் விழுந்து வேண்டிக் கேட்டுக்கொண்டான்.

அரசனுக்கும் ஞானிக்கும் நடந்த சம்பாஷனைகள் :

ஞானி : அரசரே "மருந்து சாப்பிடும்போது குரங்கை நீங்கள் நினைக்கக் கூடாது என்பதுதானே நிபந்தனை. குரங்கை தாங்கள் நினைப்பது என்பது ஒரு செயல். ஒரு செயலைச் செய்வது வேண்டுமானால் சிரமமானதாக இருக்கலாம். செயலைச் செய்யாமல் இருப்பது எப்படி சிரமமானதாக இருக்கும். அது எளிமையான ஒன்றாகத்தான் இருக்கமுடியும்.

அரசன் : எங்கே நான் நினைக்கிறேன். அதுவாகவல்லவா நினைவுக்கு வருகிறது!

ஞானி : நீங்கள் நினைக்கக்கூடாது என்பதுதானே நிபந்தனை. தானாக வரும் நினைவுக்கு நீங்கள் எப்படிப் பொறுப்பாக முடியும்?.

அரசன் : என்ன ஐயா சொல்லுகிறீர்கள். குழப்புகிறீர்களே..... என் மனதில் தோன்றும் எண்ணங்கள், தானாகத் தோன்றினாலும் அது என்னுடைய எண்ணமாகத்தானே கருதமுடியும்.

ஞானி : அது அப்படி அல்ல, உதாரணத்திற்கு உங்கள் உடலில் இதயம் துடிக்கிறது. இரத்தவோட்டம் ஓடுகிறது. உள்உறுப்புகள் அனைத்தும் இயங்குகிறது. இதை உங்களுடைய செயல் என்று சொல்லிவிட முடியுமா

அரசன் : முடியாது, அவை தாமாகவே இயங்குகின்றன. அது இயற்கையின் இயக்கம்.

ஞானி : ஆனால் உங்கள் உடலின் வெளிப்புற உறுப்புகளின் இயக்கங்களை நீங்கள் தானே இயக்குகிறீர்கள். இயக்கிச் செயல்படுவது உங்கள் செயல்தானே!

அரசன் : ஆமாம். இவை எல்லாம் என் செயல்தான்.

ஞானி : அதுபோலத்தான். மனதில் தாமாகத் தோன்றும் நினைவுகளும், உணர்வுகளும் இயற்கையின் இயக்கம், அவரவர் மன இயல்புக்கேற்ப, தாமாகத் தோன்றி மறையக் கூடியவை. அவைகள் உங்கள் கட்டுப்பாட்டில் இல்லை. அவற்றை எதிர்த்துப் போராடுவது இயற்கைக்கு முரணான செயல். ஆனால் நீங்களாகச் சிந்திப்பதும், திட்டமிட்டுச் செயல்படுவதும் உங்களுடைய செயல். அது உங்கள் கட்டுப்பாட்டில்தான் உள்ளது. அது சரியானதாகவும், நியாயமானதாகவும் இருக்கவேண்டும்.

அரசன் : உடலில் உள்ளுறுப்புகள் தாமாக இயங்குகின்றன. வெளி உறுப்புகளை நாமாக இயக்குகிறோம் என்பது எளிமையாகப் புரிகிறது. ஆனால் மனம் என்பதும் அப்படித்தானா? மனம் என்பது ஒன்றுதானே. அதில் எப்படித் தாமாக இயங்கும் இயக்கத்தையும், நாமாக இயக்கும் இயக்கத்தையும் பிரித்துப் பார்ப்பது? சற்று விளக்கமாகக் கூறுங்கள் ஐயா.?

ஞானி : நீங்கள் சொல்வது சரிதான், உடலைப் பொறுத்தவரை தாமாக இயங்கும் உள் உறுப்புகளின் இயக்கமும், நாமாக இயக்கும் வெளி உறுப்புகளின் இயக்கமும் ஒரே சமயத்தில் இயங்கும். ஆனால் மனத்தைப் பொறுத்தவரை அப்படி இல்லை, மனம் என்பது ஒன்றுதான், அதன் இயக்கம் இரண்டு வகையில் செயல்படுகிறது. மனதின் இயல்புக்கு தக்கவாறு அதன் போக்கில் தாமாக இயங்கும் இயக்கம் ஒன்று, நாமாக சிந்திப்பதும், திட்டமிட்டு செயல்படுவதும் மற்றொன்று. இவ்விரு இயக்கமும் ஒரே சமயத்தில் எப்பொழுதும் இயங்காது. ஒன்று இயங்கும்போது மற்றொன்று இயங்காது. உங்களை அறியாமல் தோன்றுவதெல்லாம் அதன்போக்கில் தாமாக இயங்கும் இயக்கம், அது உங்கள் கட்டுப்பாட்டில் இல்லை. உங்களுக்குத் தெரிந்து நீங்களாக எண்ணுவதெல்லாம் உங்கள் செயல்; உங்கள் இயக்கம். இது உங்கள் கட்டுப்பாட்டில் உள்ளது. உங்களை அறியாமல் எந்த எண்ணமோ, உணர்வு வந்தாலும், அவை மிகவும் தீயவைகளாகவும், மோசமானவைகளாகவும் இருந்தாலும் கூட அதற்கு நீங்கள் பொறுப்பல்ல. அவை வந்தது எப்பொழுது உங்களுக்குத் தெரியவருகிறதோ, அப்பொழுதே அவைகள் முடிந்து விட்டிருக்கின்றன. உங்களுக்குத் தெரிந்த கணத்தில் இருந்து நீங்களாக இயக்கும் இயக்கம் வந்துவிடுகிறது. அது உங்கள் கட்டுப்பாட்டில் தான் இருக்கிறது. தாமாக இயங்கும் இயக்கம் பயம், கவலை, கோபம், குரங்கைப்பற்றிய நினைவு என எவையாக வேண்டுமானாலும் இருக்கலாம், இவற்றை எதிர்த்து நீங்கள் போராட முற்பட்டால், அது உங்களையே எதிர்த்து போராடுவதற்குச் சமம். ஏனெனில் அவைகள் வந்தது உங்களுக்கு தெரிந்த கணத்திலேயே தாமாக இயங்கும் இயக்கம் முடிந்து நீங்களாக இயக்கும் இயக்கம் வந்துவிடுகிறது. எனவே இதற்குப் பின் உங்கள் போராட்டமெல்லாம் உங்களை எதிர்த்துதான் என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும். இது முகம் பார்க்கும் கண்ணாடி முன் நின்று சண்டையிடுவதற்குச் சமம். எனவே நமது போராட்டத்தை விட்டுவிட்டால் போதும். மன அமைதி என்பது தாமாகவே வந்து விடும்.

அரசன் : போராடுவதுதான் பிரச்சினை என்பதைப் புரிந்து கொண்டேன். இதை மறந்து மீண்டும் என்னை அறியாமல் போராடிவிட்டால் என்ன செய்வது?

ஞானி : உங்களை அறியாமல் போராடிவிட்டால்கூட அது உங்கள் செயல் அல்ல, அதுவும் தாமாக இயங்கும் இயக்கத்தோடு சேர்ந்ததுதான். நீங்களாக அறிந்து போராடாமல் இருந்தால் போதும். எப்போது உங்கள் கவனத்திற்குத் தெரிகிறதோ அப்பொழுது விட்டுவிடுங்கள்.

அரசன் : ஐயா மிகவும் நன்றாகப் புரிந்து விட்டது. நல்ல தெளிவு கிடைத்தது. மனம் பாரம் இழுந்து மிகவும் லேசாகிவிட்டது. இனி என் கடமையைச் சிறப்பாகச் செய்வேன்.

ஞானி : இதைப் புரிந்துகொண்டால் அனைவருமே ஞானிகள்தாம். இதைப் புரிந்து கொண்டபிறகு, நமது அகத்திலும் தேவையான மாற்றங்கள் தாமாக ஏற்படும்.

அரசன் : நீங்கள் கூறிய தீர்வு எனக்குமட்டுமல்ல, மனப்பிரச்சினை உள்ள அனைவருக்குமே தேவையான தீர்வு. இனி மனத்தைச் சீரமைக்கும் வேலையை விட்டுவிட்டு, புறத்தைச் சீரமைத்துச் சிறப்பாக வாழ்வேன் ஐயா. உங்கள் பொற்பாதங்களை வணங்கி மகிழ்கிறேன்.

அரசன் ஞானியிடம் விளக்கம் பெற்று தானும் ஒரு ஞானியாகவே மாறிவிட்டான்.

அகத்தை எதிர்த்துப் போராட முடியாது என்பதைப் புரிந்துகொண்ட அரசன், தன்னை எதிர்த்துப் போராடுவதில் இருந்து விடுதலையுற்றான். அவனுடைய கவனம் முழுவதும் புற விஷயமான சிறந்த ஆட்சி செய்வதிலும், மக்களின் நலனைப் பேணுவதிலும், இளைஞர்களுக்கு ஞானத்தை தரும் கல்வியைப் போதிப்பதிலும் மாற்றம் அடைந்தது. இதனால் அரசனின் ஆட்சி, புரிதலின் முந்தைய காலத்தை விட புரிதலுக்குப் பின் மிகச் சிறப்பான ஆட்சியாக நடைபெற்றது. புரிந்து கொண்ட ஓர் அரசனால் ஒரு நாடே சுபிக்ஷமடைகிறபோது,

இதைப் புரிந்துகொள்ளும் ஒவ்வொரு சராசரி மனிதராலும்கூட வரும் தங்களின் புறச்செயலில் சமுதாயத்தை உயர்வடையச் செய்ய முடியும் என்பது திண்ணம்.

"அகத்தை எதிர்த்துப் போராடமுடியாது என்பதை புரிந்துகொண்டால் தன்னை எதிர்த்து போராடுவதிலிருந்து விடுதலை அடையலாம்"

ஜென்கதை ஞானி என்ன சொன்னார்?



நன்கொடை சந்தா செலுத்த விரும்புபவர்கள், ரூ.100/-க்கான சேலத்தில் செல்லத்தக்க Cheque/DD/MO-வை SRI BAGAVATH MISSION என்ற பெயருக்கு எடுத்து கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

31, இராமலிங்கசாமி தெரு, அம்மாபேட்டை, சேலம் - 636 003. தமிழ்நாடு, இந்தியா. தொடர்புக்கு : 97891 65555, 99942 05880.

**Book packet** containing printed books

To

*If undelivered please return to:*




**SRI BAGAVATH MISSION**
31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.
**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891-65555**
www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Sri Jayavel Press, Gandhi Maidanam, Ammapet, Salem636 003. Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555.